# ஸ்ரீ ராமாநுஜன் 250.



சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசனஸபா மூலம் மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை
ஆசிரியர் : ஸ்ரீ காஞ்சீ : P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 21 | ஸௌம்யஹூ ஐப்பசிமீ<br>1969 அக்டோபர் | ஸஞ்சிகை 10 |
|---|---|---|


## ஸ்ரீவைஷ்ணவவுலகுக்குச் சிறந்த விருந்து.

### ஸகல ஸ்ரீவைஷ்ணவர்களுங்காண்க.

ஆவ்ணி புரட்டாசி மாதங்களின் ஸ்ரீ ராமாநுஜன் சென்றமாதத்திலேயே வெளிவந்து அன்பர்களுக்கெல்லாம் கிடைத்துவிட்டது. இஃது ஐப்பசி மாதத்துப் பத்ரிகையாகும். ஐப்பசிமாதமென்னும்போதே ஸ்ரீ வைஷ்ணவவுலகுக்கெல்லாம் ஒரு விலக்ஷணமான ஆனந்தம் விளைந்தே தீருமன்றோ? மஹாசார்ய ஸார்வபௌமரான மணவாளமாமுனிகளின் திருவவதாரத்தினால் புனிதமான மாதமன்றோவிது. இப்போது நிகழ்வது ஸௌம்யஸம்வத்ஸரம். அடுத்தது ஸாதாரண ஸம்வத்ஸரம் ஸாதாரணமெனினும் அஸாதாரணமேயாகும். மணவாளமாமுனிகளின் திருவவதார ஸம்வத்ஸரம் அது வென்பதை நாம் உணர்த்தவேணுமோ? ஸ்வாமி திருவவதரித்து ஷஷ்ட்யப்த பர்யாயங்கள் பத்து கடக்கின்றன.

நீறுபூத்த நெருப்பு என்னும்படி ஆடம்பரமற்ற நம் ஆசார்ய ஸார்வபௌமனுடைய ப்ரக்ருத திருநக்ஷத்ரோத்ஸவ விசேஷத்தைக் கொண்டாடுவதற்கு நாம் எவ்விதமான ஆடம்பரமும் செய்ய நினைக்கின்றிலோம். பரமஸத்வமே வடிவெடுத்த ஸ்வாமியின் திருவாக்குக்களில் * முன்னவராம் நங்குரவர்மொழிகள் உள்ளப்பெற்றோம் முழுதுநமக்கவை பொழுதுபோக்காகப் பெற்றோம் * என்பதனை உணராதாரில்லை. ஸகல பூர்வாசார்ய ஸ்ரீ ஸூக்திகளையும் கண்டஸ்தமாக்கிக் கொண்டு அவற்றால் போது போக்குவதையே விரதமாகக்கொண்ட நம் ஸ்வாமியின் திருவுள்ளமுகக்க நாம் செய்யவேண்டியது ஸகலபூர்வாசார்ய க்ரந்தங்களையும் ஒன்றிலும் ஒன்றுக்கும் துர்ப்பிக்ஷமில்லாதபடி ஸுபரிஷ்க்ருதமான முறையில் பதிப்பித்து வெளியிடுவதொன்றேயாம்.

ஏற்கெனவே நாம் தெரிவித்திருப்பதொன்றை மீண்டுமிப்போது நினைவூட்டுகிறோம். ஸ்ரீவைஷ்ணவவுலகில்மட்டுமன்றிக்கே அகண்ட பூமண்டலத்திலும் ப்ரக்க்யாதராய் அதிமாநுஷக்ருத்யங்களை நடத்தியருளாநின்ற ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யரான ஸ்ரீமந்நாராயண ராமாநுஜ ஜீயர்ஸ்வாமி ஸன்னிதியில் இதைப்பற்றி அடியேன் ப்ரஸ்தாவித்து ப்ரார்த்தித்தபோது, அந்த க்ஷணத்திலேயே திருவுள்ளமுவந்து ஸ்ரீபகவத் ராமாநுஜக்ரந்தமாலையை தேவநாகரலிபியிலும் தெலுங்குலிபியிலும், ஸ்ரீமத்வரவரமுநீந்த்ரக்ரந்தமாலையைத் தெலுங்குலிபியிலும் பதிப்பிக்க நியமனம் தந்தருளினபடியால் ஆறுமாதகாலமாக இந்த முத்ரணகைங்கரியம் தொடர்ந்து நடந்து வருகின்றது. இது தவிர, ஸகல பூர்வாசார்யஸ்தோத்ரங்களையும் தேவநாகரலிபியில் பதிப்பிக்கத்தொடங்கி அது வெகுநேர்த்தியாக ஒருமாதத்திற்கு முன்னமே முடிவடைந்திட்டது.

ஆளவந்தாரருளிச்செய்த ஸித்தித்ரய ஆகமப்ராமண்யாதிகள், பட்டர் அருளிச்செய்த பகவத்குணதர்ப்பணாதிகள், எங்களாழ்வானருளிச்செய்த ஸ்ரீ விஷ்ணுபுராண வியாக்கியானம், நடாதூரம்மாளருளிச்செய்த தத்வஸாராதிகள், வாதிகேஸரி அழகியமணவாளச்சீயர்பணித்த தத்வதீப-தீபப்ரகாச தத்வநிரூபணாதிகள்...இவைபோலும் பூர்வாசார்ய க்ரந்தங்களையெல்லாம் ஸாதாரண ஹூ ஆவணி மாதத்திற்குள்ளாகப் பதிப்பித்து முடிக்க நிச்சயித்திருக்கிறது நம் பூர்வாசாரியர்கள் பணித்தருளின க்ரந்தங்களில் தற்காலம் துர்லபமாகக் காணுமவையெல்லாம் ஒன்றொழியாமே பதிப்பிக்கப்படுமென்றுகொள்க

முக்கியமாக, மணவாளமாமுனிகளருளிச்செய்துள்ள வியாக்கியான க்ரந்தங்களின் தாத்பர்யஸாரத்தை வடமொழி தென்மொழி தெலுங்கு ஹிந்தி ஆங்கிலம் ஆகிய ஐந்துபாஷைகளிலும் தெள்ளமுதென வெளியிட நிச்சயித்திருக்கிறது. இப்பெரியகாரியத்திற்கு லக்ஷம் ரூபாய்வரையில் செலவு திட்டம் இட்டிருக்கிறது. "மநோரதாநாம் அதடா: ப்ரவாஹா:" என்னும்படி நம்முடைய மனோரதங்கள் கரையழியப் பெருகுவதைப் பெருந்தேவி மணவாளனை பேரருளாளனும் திருவரங்கநாதனும் திருவேங்கடமுடையானும் தலைக்கட்டி வைத்தருள்வர்கள்.

இதன் பொருளாதார சிந்தனையில் இனி நாம் தெரிவிப்பதை நமது ஸ்ரீராமாநுஜனன்பர்கள் சிக்கனக் குறிக்கொள்ளவேணும்.

1. ஸ்ரீராமாநுஜன் சந்தாதாரர்களென்று பேர்பெற்றவர்கள் அனைவரும் 25 ரூபாய்க்குக் குறைவில்லாமல் தங்கள் சக்தியுள்ளவளவும் நாளது ஸெப்டம்பர் மாதமுடிவுக்குள் அனுப்பித்தரவேணும். அவர்கள் ஸ்ரீராமாநுஜனுக்கு ஜீவியச் சந்தாதாரர்களென்று கொள்ளப்படுவார்கள். அவர்கள் இனி எப்போதும் சந்தா செலுத்தவேண்டிய அவசியமில்லை. 25 ரூபா செலுத்த சக்தியில்லையென்பவர்கள் 15 ரூ செலுத்தவேண்டியது. அவர்கள் மறுபடியும் 1971ஆம் ஹூ பிறந்தபிறகே சந்தா செலுத்தவேண்டும். இந்த இரண்டு வகுப்பிலும் சேராதவர்களுக்கு அடுத்தப்த்ரிகைமுதல் அனுப்பப்படமாட்டாதென்பது திண்ணம்.

2. ஸ்ரீராமாநுஜன் தொடங்கின நாளிலிருந்தும் இடையிலிருந்தும் ஆங்காங்குள்ள வித்வான்களுக்கும் நமது ஆப்தர்களுக்கும் பத்ரிகையை இலவசமாக

அனுப்பிக்கொண்டு வருகிறோம். அவர்களும் 10 ரூபாய்க்குக் குறையாமல் அவசியம் நன்கொடையளித்தே யாகவேண்டும். உபேக்ஷயாக இருந்து விட்டால் இனி அவர்களுக்குப் பத்ரிகை கிடைக்காதுதான்.

3. ஸ்ரீராமாநுஜனுக்கு ஜீவியச்சந்தா செலுத்தினவர்கள் ஏறக்குறைய 25 நபர்களுண்டு. அவர்களையும் நாம் கேட்டுக்கொள்ளுகிறோம். அவர்கள் உபேக்ஷயாக இருந்துவிட்டால் மற்றவர்களுக்குப்போல் அவர்களுக்குப் பத்ரிகையை நிறுத்தமாட்டோம். ஆனாலும் நம்முடைய பிரார்த்தனைக்கு அவர்கள் ஆதரவு அளித்தே தீருவர்களென்பது நம்பிக்கை. வேண்டுகோளுமுண்டு.

4. ஸ்ரீராமாநுஜனோடு தொடர்பில்லாத பலபல பெரியார்கள் உண்டே. அவர்கள் தாராளமான மனதுடன் நூற்றுக்கணக்கில் உபகரிக்கவேணுமென்று வேண்டிக்கொள்ளுகிறோம். அப்படி உபகரிக்கும் மஹான்களுக்கு, கீழே தெரிவிக்கப்பட்ட பதிப்பு நூல்களில் அவரவர்களுக்கு உபயோகப்படுமளவு இலவசமாகக் கொடுக்கப்படும்.

5. இதை ஒரு ஸமிதியாக ஏற்படுத்தி பேட்ரன், பிரெஸிடெண்டு வைஸ் பிரஸிடெண்டு, ஸெகிரிடெரி, ட்ரஷரர் முதலான ஸ்தானங்களை ஏற்படுத்துவோம். அந்த விவரங்களைப் பிறகு வெளியிடுவோம். அதுநிற்க கீழ்க்கண்ட விலாஸத்திற்கே அவரவர்கள் தொகை அனுப்பிவர வேண்டியது. அந்தவிவரம் வெளிவந்த பிறகு பார்த்துக் கொள்வோமென்றிருக்கலாகாது. எப்போதும் பணமனுப்புவதற்கு இதுவேதான் விலாஸம். அதாவது நமது விலாஸமே.

15-9-69

P. B. அண்ணங்கராசாரியர்.
காஞ்சீபுரம்-3.

## ஓர் முக்கிய அறிவிப்பு.

இப்போது உங்கள்கையில் கிடைக்கும் பத்ரிகை ஐப்பசி மாதத்ததானாலும் புரட்டாசி மாதத்தினிடையிலேயே கிடைக்கிறது. நிகழும் ஸௌம்ய ஹூ ஐப்பசி மாதத்தில் திருமூலத்திருநக்ஷத்திரம் மாதமுதலிலும் மாதமுடிவிலுமாக இருமுறை வருகின்றது. ஆங்காங்கு ஸன்னிதிகளில் நடைபெறும் மஹோத்ஸவம் இரண்டாவது திருநக்ஷத்திரத்திற்குச் சேரவே நடைபெறும். ஆயினும் முந்தின திருநக்ஷத்திரமும் ஐப்பசித் திருமூலமேயாதலால் முதலிலும் சிறப்பாகக் கொண்டாடப்படவேண்டும். இங்ஙனே நேர்படுகிற காலங்களில் முன்பும் கொண்டாடப்படுகிற வழக்கமுள்ளது. ஸன்னிதிகளில் கொண்டாடப்படுகிறமுறை தனிப்பட்டிருக்கும். நமது ஸமிதியின் மூலமாக நாம் கொண்டாட உத்தேசித்திருக்கும் முறை ஒருவாறு இங்குத் தெரிவிக்கலாகிறது; கீழே நாம் விவரித்திருக்கிறபடி நிகழும் புரட்டாசிமாத முடிவுக்குள் அச்சேற்றப்படுமவற்றில் சிலபகுதிகளை முடித்து, ஸுப்ரஸித்தங்களான சில திவ்யதேசங்களிலுள்ள தலைவர்களுக்கு அனுப்பி, அவர்கள் மூலமாக ஆங்காங்குள்ள மணவாளமாமுனிகள் ஸன்னிதியில் சிறப்பு செய்விக்கப்படும். இதுபற்றித் தனி விளம்பரம் பிரசுரிக்கப்படும். ... *

# "ஸ்காலித்யே சாஸிதாரம்"

ஸ்ரீமந்நிகாமாந்த மஹாகுரு பணித்த ந்யாஸவிம்சதியில் ஆசார்ய லக்ஷணம் சொல்லுகிற *ஸித்தம் ஸத்ஸம்ப்ரதாயே* என்கிற முதல்ச்லோகத்தில் "ஸ்காலித்யே சாஸிதாரம்" என்பதும் ஆசார்ய கர்த்தவ்யங்களில் ஒன்ருகக் கூறப்பட்டது. அதாவது தவறு கண்டவிடத்தில் திருத்தக் கடவன் ஆசார்யன் என்றவாறு. அடியேன் ஆசார்ய பதவியை வஹிக்குமவனல்லேனுயினும் தவறு கண்டவிடத்தில் திருத்துவதை உலக நன்மைக்காக இளமை தொடங்கியே ஏற்றுக் கொண்டிருப்பவன். இந்த வகையில் இப்போது கண்ட தவறுகளிரண்டைத் திருத்துகிறேன்.

மயிலையில் சில மஹான்கள் கூடி நூற்றெட்டுத் திருப்பதி யெம்பெருமான்களின் வைபவோபந்யாஸங்கள் நடத்தி வைப்பதாக விளம்பரங் கண்டேன். பக்தர்கள் மிகவுகக்கத் தக்க காரியமிது. இதற்கு நாம் ஹ்ருதய பூர்வகமாக மங்களா சாஸனம் செய்கிருேம். இங்கு நாம் செய்யும் ஸ்காலித்ய சிக்ஷணத்தை விவேகிகள் உவந்தேற்றுக் கொண்டு திருத்திக் கொள்ளுவர்களென்று நம்புகிருேம்.

திவ்யதேச பரிக்ணயில் சீர்காழி என்றிட்டு 12—9—69ல் அந்தத் திருப்பதியைப் பற்றி ஒரு பண்டிதர் உபந்யஸிப்பதாகவும், திருச்செங்குன்றூர் என்றிட்டு 29—9—69ல் அத் திருப்பதியைப் பற்றி மற்ருெரு பண்டிதர் உபந்யஸிப்பதாகவும் பிரசுரம் செய்யப்பட்டிருக்கிறது. இவ்விரண்டு தலப்பெயர்களும் சைவப்பெயர்களேயொழிய ஸ்ரீவைஷ்ணவத் திருநாமங்களல்ல. இரண்டையும் விவரிக்கிறேன்.

திருமங்கையாழ்வாரருளிய பெரிய திருமொழியில் மூன்ரும்பத்தில் நான்காவது பதிகம் *ஒருகுறளாயென்று தொடங்குவது; அதில் பாசுரந்தோறும் *காழிச் சீராமவிண்ணகரே சேர்மினீரே* என்றே பாடலுள்ளது. காழியென்றும் சீர்காழியென்றும் வழங்கப் படுவது சிவக்ஷேத்திரம். அதை ஆழ்வார் பாடவில்லை; அதிலுள்ள (தாடாளன் ஸன்னிதியெனப் படுகிற) சீராம விண்ணகரென்னும் திருப்பதியையே பாடினர். ஆகவே சீர்காழியை வைணவத் தலமாகக் கொள்ளலாகாது. ரைல் ஸ்டேஷனும் தபால் முத்திரையும் சீர்காழியென்றிருப்பது கொண்டு மருண்டனர் போலும்.

(இரண்டாவது) நம்மாழ்வார் திருவாய்மொழியில் எட்டாம்பத்தில் நான்காம் பதிகத்தில் பாட்டுத் தோறும் "திருச்செங்குன்றூர்த் திருச்சிற்ருறு" என்றே பாடினர். சீர்காழிபோலே திருச்செங்குன்றூரும் பிரபல சைவக்ஷேத்திரம். அதனிடையே விளங்கும் திருச்சிற்ருறென்னும் திருப்பதிதான் வைணவத்தலம். மலைநாட்டில் மற்ருெரு திருச்சிற்ருறு இருப்பதாகவும், அதில் வாசி தோற்றத் திருச்செங்குன்றூரைச் சேர்த்துக்கொண்டதாகவும் மலைநாட்டுப் பெரியோர் கூறக் கேட்டிருக்கிறேன். அது எப்படியானாலும் பாடல் பெற்றதலம் திருச்சிற்ருறுதான்.

காஞ்சீபுரத்திலுள்ள வெஃகா, வேளுக்கை, பாடகம், ஊரகம் முதலான திருப்பதிகளைப் பாடும்போது கச்சிவெஃகா, கச்சிவேளுக்கை, கச்சிப்பாடகம், கச்சியூரகம் என்று பாடியிருப்பது போலவும், திருநாங்கூரைச்சேர்ந்த பதினொரு திருப்பதிகளைப் பாடும்போது நாங்கூரைச் சேர்த்துப் பாடியிருப்பது போலவும் சீராமவிண்ணகரைப் பாடும்போது காழியைச்சேர்த்துப் பாடினர்; திருச்சிற்ருற்றைப் பாடும்போது திருச்செங்குன்றூரைச் சேர்த்துப் பாடினர்—என்கிற தத்துவத்தை உலகுக்குத் தெரிவித்தோமாஞேம். இவை ஸ்காலித்யமன்று, ஏற்கெனவே தெரிந்தவிஷயந்தானென்னில் ஸந்தோஷமே. உலகம் தெளிய உணர்த்தினபடி.

## அஸூயையை வென்றவர்கள் அன்போடு காண்கவிதனை

திவ்யதேசங்களின் குணநுபவம் பண்ணுவதென்பது *நால்பஸ்ய தபஸ: ப்பலம்; ஸாதாரணமாக பகவத்குணநுபவம் பண்ணுவதற்கே தனிப்பட்ட பாக்கியம் வேணும். விசேஷித்து திவ்யதேசங்களில் விளங்கும் திருக்குணங்களை யநுபவிப்பதற்கு முந்துறமுன்னம் அருளிச்செயல் வாசோவிதேயமாயிருக்கவேணும். ''எனக்குத் திருவாமொழி தெரியும்'' என்பவர்கள் சிலர் இத்திரளில் கலந்திருக்கலாம். அன்னவர்களிடத்தில் குணநுபவம் பண்ணுவதற்கு அந்தோ! என்ன சரக்குள்ளது? மண்சுவரெழுப்பி ஜீவிக்குமவனை மகரகுண்டலம் செய்துகொடுக்கக் கேட்பதுமுண்டோ? ''ராமகுணநுபவம்பண்ணு, க்ருஷ்ணகுணநுபவம் பண்ணு'' என்று கட்டளையிட்டால் ஸ்ரீராமாயணத்தையும் ஸ்ரீபாகவதத்தையும் எடுத்துக்கொண்டு கடியாரத்தைப் பார்த்துக்கொண்டே எதையோ சொல்லிப் போதைப் போக்கிவிடலாம். "திருக்காட்கரையில் விளங்குங் குணத்தைச் சொல்லும், திருவண்பரிசாரத்தில் விளங்குங் குணத்தைச் சொல்லும்" என்ருல் அந்தோ! என்னசொல்லுவது? ஸ்த்ரீகளுக்கு ப்ரஸவவேதனை ஸஹஜம்; ஆண்களுக்குமா அது? இவர்கள் இப்படிச் சொல்லலாம்; திருக்காட்கரையென்பது மலையாளத்திலுள்ள வொருக்ஷேத்திரம்; மலையாளத்திற்கு நம்மவர்கள் விசேஷமாகப் போவதில்லை. முற்காலத்தில் மலையாளக்ஷேத்திரங்களுக்குப் போவது மிகவும் பிரயாஸம். இப்போது எங்கும் ரைல்கள் ஏற்பட்டுவிட்டது. ரைல்வண்டியைவிட பஸ் மிகவும் ஸௌக்கியம். பஸ்போகாதவிடமே கிடையாது. சிலவிடங்களில் பஸ் கவிழ்ந்து போய் ஆபத்துக்கு இடமாவதுமுண்டு. அதைப்பேபர்களில் அடிக்கடி வாசிக்கிரும். சிலர் பேபர்களைப் பார்ப்பதே கிடையாது. அது பிசகு. பேபர்களைப் பார்த்தால் தான் உலகச்செய்திகள் தெரியும். உலகச்செய்தி தெரியாத மண்டுக்களை வெறுந்திருமண்காப்பு என்று பரிகசிப்பர்கள். இப்போது திருமண்கதிர் நல்லதாகக் கிடைப்பதில்லை. முற்காலத்தில் சுள்ளங்குடித்திருமண்என்றுவரும்; அது ரொம்ப நல்ல திருமண். அது இப்போது வருவதேயில்லை. சுள்ளங்குடியா? சுருளங்குடியா? என்று சிலர் விசாரிப்பதுண்டு...இப்படியாக ஓயாத உபந்யாஸம் சொல்லிக்கொண்டு போகலாம். பொறுமையோடிருந்து கேட்பவர்களும் போதுபோவது தெரியாமல் சிரித்துக்கொண்டே கேட்பர்கள். ''இன்றையதினம் ரொம்பவிஷயங்களைக் கொட்டிவிட்டார் ஸ்வாமி'' என்பதற்கும் சிலரோ பலரோ திரளுவர்களே.

இந்த கந்தப்புராணம் கிடக்கட்டும். ஆசார்யஹ்ருதயத்தில் மூன்ருவது பிரகரணத்தில் (159) *வன்பெருவானகமுதலுய்ய* என்கிற சூர்ணை முதலாக (186) *அங்கீகரிக்க அவகாசம்பார்க்கும் ஸ்வாமித்வம் பெருநகரிலே பேர்பெற்றது* என்கிற சூர்ணையளவாக இருபத்தெட்டு சூர்ணைகளுல்-திருவாய்மொழியில் நம்மாழ்வார் மங்களாசாஸனம் செய்தருளின திருப்பதிகளில் விளங்கும் திருக்குணங்களை அவ்வோ பாசுரங்களைக் கொண்டு அற்புதமாக அருளிச்செய்துள்ளார். அந்த இருபத்தெட்டு சூர்ணைகளையும் இங்கு விஜ்ஞாபிக்கிறேன். பொருள்தெரியாமல் சூர்ணைகளைமட்டும் ஸேவித்தாலும் உள்ளம் குளிரும், உயர்ந்த ஸுக்ருதம் விளையும். பிறகு ஸஹ்ருதய ஹ்ருதயோல்லாஸகரமாகச் சிறிதுவிவரணமும்செய்வேன்.

அந்த சூர்ணைகள் வருமாறு;—

1. வன்பெருவானக முதலுய்ய இனிதாகத் திருக்கண்கள்வளர்கின்ற திருவாளன் திருப்பதி, வடிவுடை கடலிடம் கட்கிலீ யென்னுமவற்றில் இவள் திறத்தென்கொலோ வென்பிக்கிற வ்யூஹஸௌஹார்த்த ப்ரதாநம்.
2. மண்ணோர்விண்ணோர்வைப்பில்—போகின்ற ஏழுலகுக்குயிர் பாசம்வைத்த நிகரில் வாத்ஸல்யமுஜ்ஜ்வலம்.
3. உபயப்ரதாநப்ரணவமான உறைகோயிலில் எத்தேவுமென்னும் பரேசத்வம் பொலியும்.
4. வைஷ்ணவ வாமநத்தில் நிறைந்த நீலமேனியின் ருசி ஜநகவிபவ லாவண்யம் பூர்ணம்.
5. ருசிவிவசர்க்குப் பாதமே சரணுக்குமௌதார்யம் வானமாமலையிலே கொழுந்துவிடும்.
6. களைகணற்ருரை யுருக்கும் மாதுர்யம் குடமூக்கிலே ப்ரவஹிக்கும்.
7. மெலிவிலும் சேமம் கொள்விக்கும் க்ருபை தென்னகரிலே நித்யம்.
8. வ்யவஸாயஜ்ஞர் ரக்ஷண ஸ்தைர்யம் பம்போத்தர தேசஸ்த்தம்.
9. விளம்ப விரோதமழிக்கும் விருத்தகடநாஸாமர்த்த்யம் நன்னகரிலே விஸ்தீர்ணம்.
10. கடிதகடகவிகடநா பாந்தவம் அவ்வூரிலே த்விகுணம்.
11. கைம்முதலிழந்தாருண்ணும்நிதியின் ஆபத்ஸகத்வம் புகுமூரிலே ஸம்ருத்தம்.
12. சென்று சேர்வார்க்கு உசாத்துணையறுக்கும் ஸௌந்தர்யம் மாநகரிலே கோஷிக்கும்.
13. ப்ரவண சித்தம் பரத்வ விமுகமாக்கும் ஆநந்தவ்ருத்தி நீணகரிலே.
14. ஸாதரரைப் பரிசழிக்கும் சேஷ்டிதாச்சர்யம் குளத்தே கொடிவிடும்.
15. ச்ரமமனம் சூழும் ஸௌகுமார்ய ப்ரகாசம் ஆய்ச் சேரியிலே.
16. மஹாமதிகள் அச்சம்கெட்டு அமரும் சௌர்யாதிகள் சிற்ருற்றிலே கொழிக்கும்.
17. ஸாத்யஹ்ருதிஸ்த்தனுயும் ஸாதநமொருக்கடுக்கும் க்ருதஜ்ஞதாகந்தம் தாயப்பதியிலே.
18. அவகாஹித்தாரை அநந்யார்ஹமாக்கும் நாயகலக்ஷணம் வளம்புகழுமூரிலே குட்டமிடும்.

19. போக்யபாகத்வரை தெளிந்தசந்தைக்கு முன்னில் மூன்றிலும் ப்ரகடம்.
20. போகத்தில் தட்டுமாறும் சீலம் காட்கரையிலே கரையழிக்கும்.
21. மஹாத்மாக்கள் விரஹம் ஸஹியாத மார்த்தவம் வளத்தின் களத்தே கூடு பூரிக்கும்.
22. பிரிந்த துன்பக்கடல்கடத்தும் விஷ்ணுபோதாந்ருசம்ஸ்யம் நாவாயிலே நிழலெழும்.
23. சரண்யமுகுந்தத்வம் உத்பலாவதகத்திலே ப்ரஸித்தம்.
24. மார்க்கபந்து சைத்யம் மோஹநத்தே மடுவிடும்.
25. ஸைந்ய புத்ரசிஷ்ய ஸாத்த்யஸித்த பூஸுரார்ச்சநத்துக்கு முகநாபி பாதங்களை த்வாரத்ரயத்தாலே காட்டும் ஸாம்யம் அநந்தசயநத்திலே வ்யக்தம்.
26. மோக்ஷதாநத்தில் ப்ரணத பாரதந்த்ர்யம் வளம்மிக்க நதியிலே கரைபுரளும்.
27. த்யாஜ்யதேஹவ்யாமோஹம் மருள்கள் கடியும் மயல் மிகு பொழிலிலே தழைக்கும்.
28. அங்கீகரிக்க அவகாசம் பார்க்கும் ஸ்வாமித்வம் பெருநகரிலே பேர் பெற்றது.

... ... .... .... ...

ஆரியர்காள்! சூர்ணிகைகளை ஸேவித்தீர்களா? எற்றைக்கும் ஏழேழ்பிறவிக்கும் இவற்றையே திருப்பித்திருப்பி அநுஸந்தித்துக் கொண்டிருந்தாலும் சலிப்புண்டோ? வானமாமலை, திருச்சிற்ருறு, திருநாவாய், திருக்காட்கரை, அனந்தசயனம் ஆக இவ்வைந்து திருப்பதிகளே இங்கு முக்தகண்டமாகத் தெரிவிக்கப்பட்டன. மற்ற திருப்பதிகளைப்பற்றி எந்தசூர்ணையில் எந்த திவ்யதேசம் எவ்விதமாகத் தெரிவிக்கப்பட்டுள்ள தென்பதைக்கூட அறியார் அறியவும் கில்லார்.

### ப்ரஸங்காத் சூர்ணைகளினடைவே குணநுபவம் பண்ணுவோம்

1. [வன்பெருவானக மித்யாதி] திருவரங்கம் பெரியகோயிலில் விளங்கும் திருக்குணம் முக்கியமாக ஸௌஹார்தம்—என்கிறது இதில். திருவாளன் திருப்பதி என்பது எழுவாய். * திருவாளனினிதாகத் திருக்கண்கள் வளர்கின்ற திருவரங்கமே* என்கிற பெரியாழ்வார் பாசுரமறிக. இதுதான் அர்ச்சாவதாரமாயிருக்கச் செய்தேயும் பரவ்யூஹவிபவாந்தர்யாமி என்கிற மற்றை நான்கு நிலைமைகளின் அநுபவமும் ஆழ்வார்க்கு இங்கே உள்ளதென்பது திருவாய்மொழியில் *கங்குலும் பகலுமென்கிற பதிகத்திலுள்ள பாசுரங்களினுல் தெரியவருகின்றது. எங்ஙனேயென்னில்; *வடிவுடை வானோர்தலைவனே!* என்பதிலே பரவாஸுதேவனுடைய அநுபவம் இங்கு ஆயிற்று. *கடலிடங்கொண்டகடல்வண்ணா !* என்பதிலே வ்யூஹாநுபவமாயிற்று *கட்கிலீ! உன்னைக்காணுமாறருளாய்* என்றதிலே அந்தர்யாமி யநுபவமாயிற்று. *காகுத்தா கண்ணனே! * என்றதிலே விபவாவதாராநுபவமாயிற்று. ஆக இங்ஙனே அநுபவிக்கப்படுகிற பரத்வாதிகளில் வைத்துக்கொண்டு, வ்யூஹத்தின் குணமான ஸௌஹார்த்தத்தின் அநுபவம் ஆழ்வார்க்கு இங்கு உறைத்திருக்கும். அதாவது—ஸௌஹார்த்த குணத்தையே இங்கு ஆழ்வார் ப்ரதானமாகவைத்து அநுபவிக்கிருர் என்றபடி. அதற்கு என்ன கமக மென்னில்; [இவள்திறந்தென்கொலோ] * திருவரங்கத்தாய்! இவள் திறத்து என்சிந்தித்

தாயே! * என்றும், *என்கொலோ முடிகின்றதிவட்கே* என்றும் இங்ஙனே கேள்வியாகவுள்ள பாசுரங்கள் பலவற்றையும் நோக்குமிடத்து இது நன்கு தெரிய வருகின்றது. * பாற்கடல் யோகநித்திரை சிந்தைசெய்த வெந்தாய்! * என்பது நம்மாழ்வார் பாசுரம். வ்யூஹஸ்தானமான திருப்பாற்கடலிலே எம்பெருமான் ஜகத்ரக்ஷண சிந்தை பண்ணுவதாக ப்ரஸித்தம். * உறங்குவான்போல் யோகு செய்த பெருமானிறே. அப்படி அவன் ஜகத்ரக்ஷணசிந்தை பண்ணுவதற்கு எது மூலமென்னில்; ஸௌஹார்தமென்கிற குணமே மூலம். நம் நிகமாந்த மஹா குருவும் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் உபோத்காதாதிகார முடிவில் * ஈச்வரஸ்யச ஸௌஹார்தம்'' இத்யாதி ப்ரமாணத்தைக் காட்டியருளுகிறார்; அவர்தாமே சரணு கதி தீபிகையிலும் *ஸ்வப்ராப்தயே தநுப்ருதாம் த்வரஸே முகுந்த! ஸ்வாபாவிகம் தவ ஸுஹ்ருத்த்வமிதம் க்ருணந்தி * என்றும் பணிக்கிறார். ஆக இந்த மஹா குணத்தைப் பற்றாசாகக்கொண்டு *கங்குலும் பகலும் பதிகம் நடைபெறுகின்றது. பட்டரும் * விச்வத்ராண விமர்சநஸ்கலிதயா நித்ராஸி ஜாகர்யயா* என்றருளிச் செய்தார். ஸ்ரீரங்கநாதன் பக்கலிலே ஸௌஹார்த குணாநுபவம் பண்ணவேணு மென்றதாயிற்று. இந்த குணத்தின் உண்மைஸ்வரூபத்தை யுணர்ந்தால் சேதனர் களுக்கு விளையும் நன்மைகளுக்கெல்லாம் மூலம் ஸுஹ்ருத்தான ஸர்வேச்வர னுடைய சித்தனையே யென்பது எளிதாகத் தேறி நிற்கும். இந்த குணத்தை நெஞ்சுருகியநுபவிக்க இட்டுப் பிறந்தவர்கள் பரமபாக்யசாலிகள். இதை எத்தனை காலமு மெத்தனை யூழியும் அநுபவிக்கலாம்.

2. [மண்ணோர் விண்ணோர் வைப்பில் இத்யாதி] திருவேங்கடமுடையான் பக்கலில் விளங்கும் திருக்குணம் வாத்ஸல்யமென்கிறது இதில். *வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு* என்கிற திருமழிசைப்பிரான் பாசுரத்தின்படி உபய விபூதியிலுள்ளார்க்கும் சேமித்துவைத்த நிதிபோன்றது திருமலை. நிதி ஒருவர் கண்ணுக்கும் புலப்படாமல் மறைந்திருப்பதாதலால், நிதியாகச் சொல்லப்பட்ட திருவேங்கடமுடையானை அந்தர்யாமியாகக் கொள்ளவடுக்கும். அந்தர்யாமி யிடத்தில் காணும் குணம் எதுவென்றால். கடவல்லியில் *அங்குஷ்டமாத்ர: புருஷோ மத்ய ஆத்மநி திஷ்டதி, ஈசாநோ பூதபவ்யஸ்ய ந ததோ விஜுகுப் ஸதே* என்று ஓதினபடியாலும், அவ்விடத்து (ரங்கராமாநுஜ) பாஷ்யத்தில் ''ஸ ஹி தத்வாத்ஸல்யாதிசயாத் தேஹகதாநபி தோஷாந் போக்யதயா பச்யதீத்யர்த:'' என்றதனாலும் தோஷபோக்யத்வமாகிற வாத்ஸல்யமே யென்பது தெரியவரும். திருவேங்கடமுடையானிடத்தில் நம்மாழ்வார் இந்த வாத்ஸல்ய குணத்தையே யநுபவித்தமை அவருடைய மூன்று பாசுரங்களினால் விளங்கு கின்றது. அந்த மூன்றுபாசுரங்களில் *நிகரில் புகழாய்-திருவேங்கடத்தானே!* என்கிற ஒரு பாசுரத்தைமட்டுங் கொள்வோம்.

நிகரில்புகழென்று வாத்ஸல்யத்திற்குத் திருநாமம். மற்றைத் திருக்குணங் களுக்கு நிகருண்டு; வாத்ஸல்யத்திற்கு நிகரேகிடையாது. தோஷத்தை தோஷ மாகவும், குணத்தைக் குணமாகவும் கிரஹிப்பர்கள் சிலர்; குணத்தையும் தோஷ மாக க்ரஹித்துப் பறைசாற்றுவர் பலர். தோஷத்தையும் குணமாக க்ரஹிப்ப தென்கிற வாத்ஸல்யத்திற்கு நிகரில்லையே. ஆனதுபற்றியே ஸ்வாமியெம்பெரு

மானுர் கத்யத்தில் *அகிலேத்யாதி மஹாசூர்ணையில் "அபாரகாருண்ய ஸௌசீல்ய வாத்ஸல்யௌதார்ய-ஐச்வர்ய ஸௌந்தர்ய மஹோததே!" என்று வாத்ஸல் யத்தையிட்டு அருளிச்செய்தபின்னையும் மீண்டும் "ஆச்ரிதவாத்ஸல்யைக ஜலதே!" என்று தனிப்படவும் இட்டருளினர், ஸ்வாமி நிகமாந்தகுருவும் அந்தர்யாமியை அநுபவிக்கிற *ஔதந்வதே மஹதி ஸத்மநி பாஸமாநே * என்னும் ச்லோகத்தில் * அந்த: கலேபரமிதம் ஸூக்ஷ்மம் ஸூக்ஷ்மம் ஜாதம் கரீச! கதம் ஆதரணாஸ் பதம் தே * என்றூர்; இங்கு "ஜாதம் கரீச! கடிசாவஹம்மோ தவாஹோ" என்னலாமா யிருக்க, அதைவிட்டு * ஆதரணாஸ்பதம் தே* என்றதற்குச் சேர அழகாக வியாக் கியானம் செய்துள்ளார்கள். (அதாவது) இங்கு வாத்ஸல்யம் விளங்குகின்ற தென்றூர்கள். ஆக விப்படி அந்தர்யாமியின் குணமாகக் கடவல்லீஸித்தமான வாத்ஸல்ய மஹாகுணத்தை ஆழ்வார் திருவேங்கடமுடையான் பக்கலிலே அநுப வித்தாராயிற்று.

3. [உபயப்ராதாநேத்யாதி.] ஆழ்வார்திருநகரிதன்னில் ஆதிப்பிரான் பக்க லில் விளங்கும் திருக்குணம் பரத்வமென்கிறூர் இதில். இத்திருப்பதிக்குப் பாடலான *ஒன்றுந்தேவுபதிகத்தில் எல்லாப் பாசுரங்களிலுமே பரத்வம் விளங்க நின்றூலும் * உறுவதாவதெத் தேவுமென்கிற பத்தாம் பாட்டில், ஸமஸ்தவஸ்துக்களும் தன் னுடைய அஸாதாரண விக்ரஹம்போலே தனக்கு ப்ரகாரமாம்படியிருக்கிற ஐச்வர் யத்தோடேகூடத் திருக்குருகூரிலே ஸுலபனாய் வந்துநின்றானென்று கூறியதைச் சிறப்பாகத் திருவுள்ளம்பற்றி ஆசார்யஹ்ருதயகாரர் அப்பாசுரத்தைக் கொண்டபடி.

4. [வைஷ்ணவவாமனத்திலித்யாதி.] இதனால் திருக்குறுங்குடியில் விளங் கும் திருக்குணம் திவ்யாவயவ சோபையாகிற லாவண்ய மென்கிறது. இத்திருப் பதிக்குப்பாடலான *எங்ஙனேயோ பதிகத்தில் பாசுரந்தோறும் நம்பியின் வடிவழகு பற்றியபேச்சே நிரம்பியுள்ளது அவற்றினுள்ளும் * நிறைந்த சோதி வெள்ளஞ் சூழ்ந்த நீண்ட பொன்மேனியொடும் நிறைந்தென்னுள்ளே நின்றொழிந்தான் நேமி அங்கையுளதே * நீலமேனியும் நான்கு தோளுமென்னெஞ்சம் நிறைந் தனவே * என்னும் பாசுரங்களில் ஆழ்வார் திருவுள்ளத்திலே வேறொன்றுக்கு இட மறும்படி காளமேக நிபச்யாமமான விக்ரஹத்தினுடைய அழகே குடிகொண்டு விட்டதென்றது இங்கெடுத்துக் காட்டப்பட்டது.

5, [ருசிவிவசர்க்கு இத்யாதி.] இதனால் வானமாமலையிலே விளங்குங் குணம் ஔதார்யமென்கிறது. இத்திருப்பதிக்குப் பாடலான * நோற்ற நோன் பில் *ஆறெனக்கு நின்பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்* என்றூராழ்வார்; பாதமே சரணாக்கினையென்னுதே சரணாகத் தந்தொழிந்தாயென்கையாலே எம்பெரு மான் தனது ஔதார்யகுணத்திற்குத் தக்கபடி வேறுபலவற்றையுங் கொடுத்து விடாமல் தன்னையே கொடுக்கிறாப்போலே தன் திருவடிகளையே தந்தருளினது நிகரற்ற ஔதார்யமென்று திருவுள்ளம்பற்றினபடி. மூன்றூவது பாட்டில் * எங் கார்முகில்வண்ணா! * என்றதைக் கொண்டும் இங்கு ஔதார்ய குணமநுபவிக்கப்படு வது உசிதம். *மாரியனைய கை* என்று ஔதார்யத்திற்கு மேகம் உவமையாம்.

6. [களைகணற்றாரை யித்யாதி.] இதனால் திருக்குடந்தையில் அநுபவிக்கத் தக்க திருக்குணம் மாதுர்யமென்கிறது. ஆளவந்தார் * வசீ வதாந்ய: * இத்யாதி

ச்லோகத்தில் *மதுரஸ் ஸ்திரஸ் ஸம:* என்று மாதுர்யத்தையும் பகவத் குணங்களிலொன்றாக வருளிச்செய்தது காண்க. இத்தலத்தில் எம்பெருமான் ஆராவமுது என்று திருநாமம் பூண்டிருப்பதொன்றேபோதும். பத்தாம்பாட்டில் * ஆராவமுதாய் அடியேனுடலியகமேதித்திப்பாய் * என்றது விலக்ஷணநுபவம்.

7. [மெலிவிலு மித்யாதி.] திருவல்லவாழென்கிற மலைநாட்டுத் திருப்பதியிலே விளங்கும் திருக்குணம் க்ருபை என்கிறது இதில். எந்த விஷயத்தில் க்ருபையென்னில்; கீழே நடந்த ஆராவமுதனனுபவத்தில் *உனக்காட்பட்டும் அடியேன் இன்னமுழல்வேனோ?* என்று அலமாப்போடே தலைக்கட்டுகையாலே * வைகலும் வினையேன் மெலிய * என்று மிக மிக மெலியாநிற்கச் செய்தேயும் * அடிமேல் சேமங்கொள் தென்குருகூர்ச் சடகோபன் * என்னும்படி அவனையே ரக்ஷகனாக உறுதிகொண்டிருக்கும்படியான க்ருபை. இதை ஆழ்வார் இத்திருப்பதியின் பதிகத்திலே * சுழலில்மலிப்பதற்க சக்கரப் பெருமானது தொல்லருளே* என்று சொல்லி அநுபவித்தாராயிற்று.

8. [வ்யவஸாயஜ்ஞர் இத்யாதி.] திருவண்வண்டூரிலே விளங்கும் திருக்குணம் ரக்ஷணஸ்தைர்யம் என்கிறது இதில். ஆளவந்தார் * வசீ வதாந்ய: * என்னும் சுலோகத்திலே ஸ்திர: என்று ஸாதித்த ஸ்தைர்ய குணம் ரக்ஷணவிஷயத்திலன்றோ. *மாறில் போரரக்கன் மதிள் நீறெழச் செற்றுகந்த ஏறு சேவகனார்க்கு* என்கிறபடியே இத்திருப்பதியிலுள்ளவன் சக்ரவர்த்தி திருமகனாகையாலே *புணர்த்த பூந்தண்டுழாய்முடி நம்பெருமானென்னும்படி ரக்ஷணத்திற்குத் தனிமாலையிட்டிருக்கும்படி சொல்லும் முகத்தால் ரக்ஷணஸ்தைர்யம் அநுபவிக்கப் பட்டதாயிற்று.

9. [விலம்பவிரோதமழிக்கும் இத்யாதி.] ஒப்பிலியப்பன் ஸன்னிதியென்கிற திருவிண்ணகரிலே அகடிதகடநாஸாமர்த்த்யமென்கிற திருக்குணம் விளங்குமென்கிறதுஇதில். இது * நல்குரவும் செல்வுமென்கிற இத் திருப்பதியின் பதிகத்திலே பாசுரந்தோறும் விசதம்.

10. [கூடிதகடகவிகடநாபாந்தவ மித்யாதி.] துலைவில்லி மங்கலமென்கிற இரட்டைத்திருப்பதியில் ஸகலவித பந்துத்வமென்கிற திருக்குணம் விளங்குமென்கிறது இதில். *மாதா பிதா ப்ராதா நிவாஸச் சரணம் ஸுஹ்ருத் கதிர் நாராயண.* என்று உபநிஷத்து ஓதின ஸர்வேச்வரனுடைய ஸகலவித பந்துத்வமானது இத் திருப்பதிப்பதிகத்திலே *சிந்தையாலும் சொல்லாலும் செய்கையினாலும் தேவபிரானையே தந்தைதாயென்றடைந்த வண்குருகூரவர்சடகோபன் * என்ற பாசுரத்தினால் மட்டுமன்றிக்கே * உமக்காசையில்லை விடுமினோ * உமக்காசையின்றி அகற்றினீர் * என்பது முதலான பாசுரங்களினாலும் விளக்கப்பட்டதாயிற்று

11. [கைம்முதலிழந்தாருண்ணுமித்யாதி.] ஆபத்ஸகத்வமென்கிற திருக்குணம் திருக்கோளூரில் விளங்குமென்கிறதுஇதில். திருக்கோளூர்ப்பதிகத்திற்குக் கீழ்ப்பதிகமான * மாலுக்குவையத்திலே எல்லாமிழந்ததாகச் சொல்லிற்று, எல்லாமிழந்தவர்களுக்கு நிதிகிடைத்துவிட்டால் குறையொன்றுமில்லையே. திருக்கோளூரில் ஸேவைஸாதிப்பவர் வைத்தமாநிதிப் பெருமாளாகையாலே, கீழே

எல்லாமிழந்த ஆழ்வார்க்கு நிதி கிடைத்து விட்டது. அவ்விடம் * செல்வம் மல்கி யவன்கிடந்த திருக்கோளூராகையாலே ஆபத்துக்கு உதவக்குறையில்லையாயிற்று. நிதிதாவே ஆபத்தனமன்றோ ?

12. [சென்றுசேர்வார்க்கு இத்யாதி] தென்திருப் பேரெயில்மாநகரில் விளங்கும் திருக்குணம் ஸௌந்தர்யமென்கிறது இதில். இத்திருப்பதியின் பதிக மான * வெள்ளைச்சுரிசங்கில் * செங்கனிவாயின் திறத்ததாயும் செஞ்சுடர் நீண் முடித்தாழ்ந்ததாயும், சங்கொடு சக்கரம் கண்டுகந்தும் தாமரைக் கண்களுக்கற்றுத் தீர்ந்தும் * என்றதில் நோக்காக இது அறுதியிட்டபடி. திருக்குறுங்குடியில் அநு பவித்த குணம் லாவண்யம், இங்கு ஸௌந்தர்யம் என்று வாசிகாண்க. இந்த ஸௌந்தர்யம் எப்படிப்பட்டதென்ன [சென்று சேர்வார்க்கு உசாத்துணையறுக்கும்] நெஞ்சைக் கவர்வது என்பது பரமதாற்பரியம். * என்னெஞ்சினுருமங்கேயொழிந் தார், உழந்தினியாரைக்கொண்டு என்னுசாகோ?* என்று சொல்லியிருக்கை யாலே உசாத்துணையானநெஞ்சு அபஹரிக்கப்பட்டமை விளங்கிற்று. யாருடைய நெஞ்சு அபஹரிக்கப்பட்டதென்றால் [சென்று சேர்வார்க்கு] * தென் திருப்பே ரெயில் சேர்வன் சென்றே * என்ற பாசுரத்தின்படியே சென்று அத்தலத்தில் சேர்ந்தவரான தம்முடைய நெஞ்சைக் கொள்ளை கொள்ளுமது அந்தஸௌந் தர்யம் என்றவாறு.

13. [ப்ரவணசித்தம் இத்யாதி.] திருவாறன்விளைத்திருப்பதியில் விளங் கும் திருக்குணம் ஆனந்தப்பெருக்கமென்கிறது இதில். இத்திருப்பதியின் பதிக மானது *இன்பம் பயக்க எழில் மலர்மாதரும் தானுமிவ்வேழுலகை, இன்பம் பயக்க இனிதுடன் வீற்றிருந்தாள்கின்ற எங்கள்பிரான் * என்று தொடங்கப்படுமதாகை யாலே. அந்த ஆனந்தப்பெருக்கம் எப்படிப்பட்டதென்றால், அத்தலத்தில் ப்ரா வண்யம் கொண்டவர்களுடைய சித்தத்தை * சிந்தை மற்றொன்றின் திறத்ததல் லாத் தன்மை * என்று பரமபதத்தின் பேர்சொல்லுகையும் அஸஹ்யமாம்படி பரத்வத்தில் விமுகமாக்குமது.

14. [ஸாதாரைப் பரிசழிக்கு மித்யாதி.] பெருங்குளமென்கிற திருக் குளந்தைத் திருப்பதியில் விளங்கும் திருக்குணம் சேஷ்டிதாச்சர்யமென்கிறது இதில். இத்தலத்தெம்பெருமானுடைய திருநாமம் மாயக்கூத்தனென்பது; ஆச் சரியமான சேஷ்டிதங்களைச் செய்பவனென்றபடி. அவற்றின் விவரணம் நமது திருவாய்மொழி திவ்யார்த்த தீபிகையில் காணத்தக்கது.

15. [ச்ரமமனுஞ்சூழு மித்யாதி.] திருவண்பரிசாரத்திலே ஸௌகுமார்யம் ப்ரகாசிக்குமென்கிறது இதில். இத்தலத்திற்கான பதிகம் * அங்குமிங்கும் * என் பது. இதில் மூன்றாம் பாட்டில் *ஆளுமாளார் ஆழியுஞ்சங்கும் சுமப்பார்தாம், வாளும் வில்லுங்கொண்டு பின்செல்வார் மற்றில்லை* என்றுள்ளது; பூவேந்திறைற் போலேயிருப்பது திருவாழி திருச்சங்கை யேந்துவது; அதுதானும் மலை சுமந்தாற் போலே வன்பாரமாகத் தோற்றினது தெரிவிக்கப்பட்டுள்ளது. இப்படித் தோற்று வது ஸௌகுமார்யாநுஸந்தானத்தின் காரியமே யாதலால் இங்கு ஸௌ குமார்ய குணப்ரகாசமென்றறியக்கடவது.

16. [மஹாமதிகள் அச்சங்கெட்டித்யாதி.] திருச்சிற்றாற்றிலே விளங்கும் திருக்குணம் சௌர்யவீர்யபராக்ரமமென்கிறது இதில். இத்திருப்பதிக்கான பதிகத்தின் முதற்பாசுரம் * வார்கடாவருவி யானைமாமலையின் மருப்பிணைக்குவடிறுத்துருட்டி* இத்யாதி. குவலயாபீட மதயானை, சாணூர முஷ்டிகமல்லர்கள், கம்ஸன் முதலியவர்களை முடித்த வீரம் கனமிடுக்காகப் பேசப்படுகிறது பாசுரத்தில். கீழே திருவண்பரிசாரப் பதிகத்தில் 'எம்பெருமானுக்குப் பரிவர் யாருமில்லையே!' என்று ஆழ்வார் அஞ்சின அச்சம்தீர எம்பெருமான் தம்முடைய பெருவீரத்தைக்காட்டினது மட்டுமன்றிக்கே *மூவாயிரவர் வேதியர்கள் தம்பதி * என்று மூவாயிரம் ஸ்ரீவைஷ்ணவர்கள் பரிகைக்குப் பாங்காக வுள்ளார்கள் என்றுங்காட்டி ஆழ்வாருடைய அச்சத்தைத் தீர்த்தமை இத்தலத்து அநுபவத்திற்கு விசேஷம்.

17. [ஸாத்ய ஹ்ருதிஸ்தஜயுமித்யாதி.] திருக்கடித்தானமென்னும் திருப்பதியில் விளங்கும் திருக்குணம் க்ருதஜ்ஞத்வமென்கிறது இதில். க்ருதஜ்ஞத்வமென்பது மனிசர்க்கு உரிய குணமேயல்லது எம்பெருமானுக்கு உரியதோ! என்று சங்கிக்கவேண்டா; ஆளவந்தார் * வசீ வதாந்ய: * என்கிற ச்லோகத்தில் * க்ருதீ க்ருதஜ்ஞ:* என்று இதனையும் சேர்த்தருளியிருப்பதுகாண்க. *கதஞ்சிதுபகாரேண க்ருதேநைகேந துஷ்யதி* என்று ஸ்ரீராமாயணமும் ஓதிற்று. எம்பெருமானுக்கு ஆழ்வார் திருவுள்ளத்தில் வாஸமே ப்ராப்யம்; இது பெறுதற்காகவே அவ்வோ திருப்பதிகளில் உறைவது. இது மிகச் சிறந்த அர்த்தம். *மலைமேல் தான்னின்று என் மனத்துளிருந்தானை* என்பது முதலான பாசுரங்களினால் அறியத்தக்க பொருள் இது. ப்ரக்ருதம் திருக்கடித்தானத்தை யநுபவிக்கின்ற ஆழ்வார் *திருக்கடித்தானமும் என்னுடைச் சிந்தையும் ஒருக் கடுத்து உள்ளே யுறையும் பிரான் கண்டீர்* என்றார். எம்பெருமான் தனக்கு ப்ராப்யமான ஆழ்வார் திருவுள்ளத்தை வாஸஸ்தானமாகப் பெற்ற பின்பும் திருக்கடித்தான நகரையும் விடாமலிருப்பதானது அத்தலத்தின் பக்கல் தனக்குள்ள க்ருதஜ்ஞதாநுஸந்தானத்தாலே யென்பது ஸ்ரீ வசனபூஷணத்திலும் அருளிச் செய்யப்பட்டுள்ளது. ஆகவே இத்தலத்தில் க்ருதஜ்ஞதாகுணம் பரிமளிக்குமென்னக்குறையில்லை.

18. [அவகாஹித்தாரை இத்யாதி ] குட்டநாட்டுத்திருப்புலியூரில் நாயக லக்ஷணம் விளங்குமென்கிறது இதில். அவயவசோபை ஆபரணசோபை முதலானவற்றால் குறையற்று, அவற்றாலே தன்னிடத்திலீடுபட்டாரை வேறொரு விஷயத்திற்கு ஆளாகாதபடி பண்ணுகை உத்தமநாயகலக்ஷணம். இது திருப்புலியூரெம்பெருமான் பக்கலிலே விளங்குமென்பதை இத்திருப்பதியின் பதிகமான * கருமாணிக்க மலையில் பாசுரந்தோறும் காணலாம். *கருமாணிக்க மலைமேல் மணித்தடந் தாமரைக் காடுகள்போல், திருமார்பு வாய் கண் கை உந்தி காலுடை யாடைகள் செய்யபிரான்* *மின்னு நீண்முடியாரம் பல்கலன் தானுடை யெம்பெருமான்* *புகழும் பொருபடையேந்தி* என்றிவை முதலான பாசுரங்களிற் கூறிய அவயவ–ஆபரண–ஆயுத சோபைகளினால் இத்தலத்தெம்பெருமான் ஆழ்வாரைத் தன்பக்கலில் ஈடுபடுத்தி, *குட்டநாட்டுத் திருப்புலியூரருமாயன் பேரன்றிப் பேச்சிலன்* என்பது முதலான பாசுரங்களினால் அநந்யார்ஹத்வத்தையும் விளைவித்தமையறிக.

19. [போக்யபாகத்வரை இத்யாதி.] திருப்புளிங்குடி வரகுணமங்கை ஸ்ரீவைகுண்டம் என்ற மூன்று திருப்பதிகளிலும் 'ஆச்ரிதாநுபவப்பதற்றம்' என்கிற திருக்குணம் விளங்குமென்கிறது இதில். இது வெகுசமத்காரம் பொருந்திய உல்லேகம். *புளிங்குடிக்கிடந்து வரகுணமங்கையிருந்து வைகுந்தத்துள் நின்று* என்பது திருவாய்மொழிப் பாசுரம்; இதை "வைகுந்தத்துள் நின்று வரகுண மங்கையிருந்து புளிங்குடிக்கிடந்து" என்று அடைவுபடுத்திக்கொள்ளவேணும். ஆழ்வாருடைய ஸமீபத்திலே எம்பெருமான் நிற்பதும் இருப்பதும் கிடப்பதுமாக ஸேவைஸாதிக்கிறபடியை நோக்குங்கால், பெரும்பசியன் சமையல்நடக்குமிடத் திலே தாமதத்தைப்பொருமல் நின்றுகொண்டே ஆச்சா ஆச்சா? என்பதும், பிறகு உட்கார்ந்தும் படுத்துக்கொண்டும் தன்பதற்றத்தைக்காட்டுமாபோலே ஆழ்வாரை யநுபவிப்பதில் பெரும்பசியனுன பெருமான் அவர்க்கு அணித்தானவிடத்திலே இப்படி நின்றுமிருந்தும் கிடந்தும் தன்னுடைய பதற்றத்தைக்காட்டுகிறபடி.

20. [போகத்தில் தட்டுமாறும்சீல மித்யாதி.] கீழ்ச்சொன்னபடி ஆழ்வா ருடனே கலந்து பரிமாறுமிடத்தில் *வாரிக்கொண்டுன்னை விழுங்குவன் காணி லென்று, ஆர்வுற்ற என்னையொழிய என்னில் முன்னம் பாரித்துத், தானென்னை முற்றப்பருகினன், காரொக்கும் காட்கரையப்பன் கடியனே * என்னும்படி மாருடிப் பரிமாறும் சீலகுணம் "திருக்காட்கரை மருவியமாயன்தன் மாயம் நினைதொறே உருகுமால் நெஞ்சம்" என்று உருகிப்பேசின திருக்காட்கரையிலே விஞ்சியிருக்கும்.

21. [மஹாத்மாக்கள் விரஹ மித்யாதி.] திருமூழிக்களத்தில் விளங்குங் குணம் மார்த்தவமென்கிறதிதில். திருவண்பரிசாரத்திலே விளங்கினகுணம் ஸௌகுமார்யம்; அது திருமேனியிலுறையுமது. மார்த்தவமென்பது திருவுள்ளத்தி லுறையுமது—என்று வாசிகாண்க. திருமூழிக்களப்பாசுரத்தில் *தமரோடு அங் குறைவார்க்குத் தக்கிலமே கேளீரே* என்ற பாசுரத்தில் நோக்காக இஃது அருளிச்செய்தது. ஸ்தோத்ரரத்னத்தில் "ஸக்ருத் த்வதாகார விலோகநாசயா த்ருணீக்ருதாநுத்தம புக்திமுக்திபி:, மஹாத்மபிர் மாம் அவலோக்யதாம் நய க்ஷணேபி தேயத்விரஹ: அதிதுஸ்ஸஹ:* என்றதை இங்கே கூட்டியநுபவிப்பது.

22. [பிரிந்த துன்பக்கடல் கடத்து மித்யாதி.] திருநாவாயில் விளங்கும் திருக்குணம் ஆந்ருசம்ஸ்யம் என்கிறதிதில். நாவாய்என்று தோணிக்குப் பெயர், "ஸம்ஸாரார்ணவமக்நாநாம் விஷயாக்ராந்த சேதஸாம், விஷ்ணு போதம் விநா நாந்யத் கிஞ்சிதஸ்தி பராயணம்" என்கிற வசனமும், * துன்பக்கடல்புக்குவை குந்தனென்பதோர் தோணிபெருதுழல்கின்றேன்* என்கிற ஆண்டாள் பாசுரமும் எம்பெருமானைத் தோணியாகத் தெரிவித்தன. (நாவாய் என்பதுமிதுவே.) வான மாமலைபோலே எம்பெருமானுடைய திருநாமமே தலத்திற்குமாயிற்று. திரு நாவாய்ப்பதிகமாகிய *அறுக்கும் வினைப்பதிகத்திற்குக் கிழே ஆழ்வார் விச்லேஷ மாகிற துன்பக்கடலில் துவண்டிருந்தாரென்பது வ்யக்தம். அதைக்கடத்துவதற் குத் தோணியாயிருந்தனன் திருநாவாய்ப்பெருமான். அவனுடைய இரக்கம் இங்கே விளங்கும்.

23. [சரண்யமுகுந்தத்வமித்யாதி.] திருக்கண்ணபுரத்தில் விளங்குங்குணம் மோக்ஷப்ரதத்வ மென்கிறதில். * சரணமாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம்: மரணமானல் வைகுந்தங்கொடுக்கும் பிரான் * என்கிற பாசுரப்படியே சரண்யனை சௌரிராஜனுடைய மோக்ஷப்ரதத்வம் இங்கே விளங்குமாயிற்று.

24. [மார்க்கபந்துசைத்ய மித்யாதி.] திருமோகூரில் விளங்கும் திருக்குணம் சைத்யமென்கிறதில். அர்ச்சிராதிமார்க்கத்திற்குத் துணைவனாகக் கொள்ளப் பட்டு வழித்துணையான காளமேகப் பெருமாளுடைய ஸாம்ஸாரிக ஸகலதாப ஹரத்வம் திருமோகூரிலே நிறைந்திருக்கும். காளமேகப் பெருமாளாகையாலே தாபஹரத்வம் ஸ்வதஸ்ஸித்தமிறே.

25 [ஸஸைந்யபுத்ரசிஷ்யே த்யாதி.] அனந்தசயனத்திலே விளங்கும் திருக் குணம் *ஸமோஹம் ஸர்வபூதேஷு* என்று கீதையில் சொல்லப்பட்ட ஸாம்ய மென்கிறது. *அனந்தபுரத்து அமரர்கோன் அர்ச்சிக்கின்று அங்கு அகப்பணி செய்வர்.* என்ற பாட்டிலே 'அமரர்கோன்' என்று ஸேனை முதலியாராகிற நித்ய ஸூரித் தலைவர்வந்து அர்ச்சிக்கின்றமை சொல்லுகையாலே தம்முடைய பரி ஜனங்களோடு கூடின அவருடைய அர்ச்சனைக்காகத் திருமுகமண்டலத்தை ஒரு வாசலாலே காட்டுவர்; * அமரராய்த்திரிகின்றார்கட்கு ஆதிசேரனந்தபுரத்து* என்று பிரமன் தன்னுடைய புத்திரர்களான 'அமரர்களோடு வந்து சேர்வதாகச் சொல்லுகையாலே ஸபுத்ரனை அந்தப் பிரமனுடைய அர்ச்சனைக்குத் திரு நாபியை ஒருவாசலாலே காட்டுவர்; * படமுடையரவில் பள்ளிபயின்றவன் பாதங் காண, நடமினோ நமர்களுள்ளீர்* என்று ஆழ்வாருபதேசங்கேட்ட சிஷ்யர் களோடே கூடின நிலத்தேவர்களின் அர்ச்சனைக்காகத் திருவடியை ஒருவாச லாலே காட்டுவர். ஆக, முகநாபி பாதங்களைத் திருவாசல்கள் மூன்றாலும் காட்டு கையாகிற ஸாம்யகுணம் அனந்த சயனத்திலே வ்யக்தமாயிற்று.

26. [மோக்ஷதானத்திலித்யாதி.] திருவாட்டாற்றுப்பதியில் ஆச்ரிதபார தந்த்ர்யமாகிற திருக்குணம் விளங்குமென்கிறதில். இத்திருப்பதிக்கான பதிகத் தில் *ஆழியானருள்தருவானமைகின்றான் அது நமது விதிவகையே* என்றும். * இன்று விண்ணுலகம் தருவானாய் விரைகின்றான் விதிவகையே * என்றும் சொல்லுகிறபடி எம்பெருமான் ஆழ்வார்க்கு மோக்ஷமளிக்குமளவில் ஆழ்வா ருடைய கட்டளையை எதிர்பார்த்து நிற்கும்படி சொல்லுகையாலே இங்கு ஆச்ரித பாரதந்த்ரியம் விளங்கு மென்றது மிகப் பொருத்தம்.

27. [த்யாஜ்யதேஹவ்யாமோஹமித்யாதி.] திருமாலிருஞ்சோலையில் எம் பெருமானுடைய வ்யாமோஹ குணம் விளங்குமென்கிறதில். ஆழ்வார் * அழுக்குடம்பு * என்று த்யாஜ்யமாக நினைக்கிற தமது திருமேனியில் எம்பெருமா னுக்குண்டான வியாமோஹம் - இத்திருமலைக்கான பதிகத்திலே * மங்கவொட்டு உன்மாமாயை * என்று கால்கட்டி விடுவித்துக் கொள்ளவேண்டும்படி தெரிவிக்கப் படா நின்றதிறே திருவாய்மொழி நூற்றந்தாதியில் * செஞ்சொற்பரன் தனது சீராரும் மேனிதனில், வஞ்சித்துச் செய்கின்ற வாஞ்சைதனின்-விஞ்சதலைக் கண்ட வனைக் கால்கட்டிக் கைவிடுவித்துக்கொண்ட-மாறன் * என்றருளியது காண்க.

28. [அங்கீகரிக்க அவகாசம்பார்க்கு மித்யாதி.] அப்பக்குடத்தான் ஸன்னிதியென்கிற திருப்பேர்நகரில் ஸ்வாமித்வமென்னுங் குணம் விளங்குமென்கிறதில். ஸ்வாமித்வமானது—தன்னுடைமையை இழந்துபோகாமல் எவ்வகையினுலாவது பெறுதற்கு முயலச் செய்யுமது. ஸர்வேச்வரன் விமுகரானவர்களையும் மடிமாங்காயிட்டு ஸ்வீகரிக்க அவகாசம் பார்க்கும் வழிகளிலே 'என்னுரைச் சொன்னுய், என்பேரைச் சொன்னுய்' என்ருற்போன்ற அஜ்ஞாத ஸுக்ருதாந்வேஷணம் தலைநிற்குமதாகையாலே திருப்பேர்நகருக்கான திருப்பதிகத்தில் * திருமாலிருஞ்சோலைமலை யென்றேன், 'என்னத் திருமால்வந்து என்னெஞ்சு நிறையப் புகுந்தான் * என்றதனுல் அக்குணம் காட்டப்பட்டதாயிற்று.

அன்பர்காள்! இந்த நிரூபணங்கள் வெகு சுருக்கமாக முடிக்கப்பட்டன. ஒவ்வொரு திருக்குணமும் இரண்டு மூன்று நாட்கள் அனுபவிக்கவேண்டியதாம். இங்ஙனே மற்றுமுள்ள திருப்பதிகளில் விளங்கும் திருக்குணங்களையும் மற்ருெரு போது குறையற அநுபவிப்போம். இப்போது, துண்டுப் பாசுரங்களால் மங்களாசாஸனம் பெற்ற திருப்பதிகளையநுபவிக்கும்வழியை நுட்பமாகக் காட்டுவோம்.

நூற்றெட்டுத் திருப்பதிகளில் பதிகம் பாடல் பெற்ற திருப்பதிகள் 72 மட்டுமே. மற்ற (36) திருப்பதிகளுக்குத் துணுக்கைப் பாசுரங்களே யுள்ளன. அவற்றில் சோழ நாட்டில்-8. தொண்டை நாட்டில்-15. பாண்டி நாட்டில்-7. [மலைநாட்டில் திருவண்பரிசார மொன்றுக்குமட்டும் துண்டுப் பாடலென்னலாம். ஆயினும் அதற்கும் பதிகம் பாடலே யென்பது பூருவாசாரியர்களின் திருவுள்ளம்.] வட நாட்டில் 6. ஆக 36. இவற்றின் பெருமைகளை யநுபவிக்கும் விதம் நுட்பமாக.

சோழ நாட்டில் (உறையூர்) ஸ்ரீ குணரத்ன கோசத்தைக் கொண்டு நாச்சியார் பெருமையை யநுபவிப்பது. (தஞ்சை) அனைவர்க்கும் தஞ்சமாம் பெருமாளென்று கொண்டு அசரண்ய சரண்யத்வ குணத்தை யநுபவிப்பது. (அன்பில்) அன்பு தோற்ற எழுந்தருளியிருக்குமிடமென்று கொண்டு ஸௌஹார்த்த குணத்தை யநுபவிப்பது (காரம்பனூர்) உத்தமனுகையாலே புருஷ ஸூக்தத்தைக் கொண்டு புருஷோத்தமத்வத்தை யநுபவிப்பது. (ஆதனூர்) ஆ-பசு; காமதேனு; எம்பெருமானுடைய ஸகல புருஷார்த்த ப்ரதத்வத்தை யநுபவிப்பது. (தலைச்சங்க நாண்மதியம்) இத்தலத் தெம்பெருமான் மதியமென்று சந்திரனுடைய திருநாமத்தை வஹிப்பதால் "சந்த்ரமா மநஸோ ஜாத:" என்ற ச்ருதியைக் கொண்டு தண்ணளியை யநுபவிப்பது. (கண்டியூர்) அரன் சாபந்தீர்த்த பெருமாளாகையாலே ருத்ர சாப விமோசன கதையை விவரித்தநுபவிப்பது. (கவித்தலம்) *ஆற்றங்கரை கிடக்குங்கண்ணனுகையாலே *ஆற்றிலிருந்துபதிகத்தையநுபவிக்க.

தொண்டை நாட்டில் (தென்னத்தியூர்) *யஸ்ய ப்ரஸாத கலயா* என்கிற ஆளவந்தார் ஸ்ரீ ஸூக்தியைக் கொண்டநுபவிப்பது (திருவெஃகா) வேகாஸேது ஸ்தோத்ரங் கொண்டநுபவிப்பது. (வேளுக்கை) காமாஸிகாஷ்டகத்தைக் கொண்டநுபவிப்பது. (திருத்தண்கா) சரணுகதிதீபிகையைக் கொண்டநுபவிப்பது. (திருப்பாடகம்) தூது சென்ற பெருங்குணத்தையும் பிலவறையில் பெரியமாமேனி

கொண்டதையும் அநுபவிப்பது. (ஊரகம் நீரகம் காரகம் கார்வானம்) அடியேனுடைய திருநெடுந்தாண்டக திவ்யார்த்த தீபிகையைக் கொண்டநுபவிப்பது. (கள்வனூர்) ஸகலஜனமநோஹரத்வ குணத்தையநுபவிப்பது. (பவளவண்ணம்) எம்பெருமான் யுகபேதேந வர்ணபேதம் கொள்வதைப் பரக்கச் சொல்லியநுபவிப்பது. (நிலாத்திங்கள் துண்டம்) எம்பெருமானுடைய திருமுகச்சோதியை *முடிச்சோதியாய் பாசுரங்கொண்டநுபவிப்பது. (திருப்புட்குழி) பரமார்த்த ஸ்துதி கொண்டநுபவிப்பது. (திருநின்றவூர்) பத்தராவியின் வாத்ஸல்யாதிசயத்தை யநுபவிப்பது. (திருக்கடிகை) அக்காரக்கனியின் அதிமாத்ர போக்யதையை யநுபவிப்பது. நரஸிம்ஹாவதாரப் பெருமையுமநுபவிக்கலாம்.

பாண்டி நாட்டில், (திருமெய்யம்) *பொய்யேகைம்மை சொல்லி மெய்யே பெற்றொழிந்ததை விளக்கி யநுபவிப்பது. (திருத்தண்கால்) தண்காலென்பது குளிர்ந்த காற்றுகையினாலே *ஓர் தண்டென்றல் வந்து அயலிடை யாருமறிந்திலர்—தடவிற்றென்புலன்கலனே* என்கிற திருவிருத்தப் பாசுரத்தை விரித்தநுபவிப்பது. (திருக்கூடல்) இது மதுரையாகையாலே திருப்பல்லாண்டவதரித்த சரிதையை யநுபவிப்பது. (ஸ்ரீவில்லிபுத்தூர்) பெரியாழ்வாராண்டாள் பெருமைகளைப் பரக்கப் பேசுவது. (ஸ்ரீ வைகுண்டம், வரகுணமங்கை, திருக்குளந்தை) கீழே ஆசார்யஹ்ருதய சூர்ணைகளைக் கொண்டு அநுபவித்தாயிற்று.

வட நாட்டில், (அயோத்தி) ஸ்ரீராம குணநுபவம் கொள்ளை கொள்ளையாக ஆகலாம். (வடமதுரை, த்வாரகை, திருவாய்ப்பாடி, விருந்தாவனம்) ஸ்ரீ க்ருஷ்ண குணநுபவம் ஆழிமோழையாய்ச் செல்லலாம். (திருப்பாற்கடல்) * ஆமோதே புவநே * இத்யாதி நடாதூரம்மாள் ஸ்ரீஸூக்தியைக் கொண்டநுபவிப்பது. (திருநாடு) *யத் தூரே மநஸோ யதேவ தமஸ: பாரே* இத்யாதி பட்டர் ஸ்ரீஸூக்தியைப் பரக்கவுபந்யஸிப்பது. பதிகப்பாடல் பெற்ற எழுபத்திரண்டு தலங்களில் ஆசார்யஹ்ருதய சூர்ணிகைகளைக் கொண்டு அநுபவித்த 28 திருப்பதிகள் போக, சேஷித்த 44 திருப்பதிகளை அந்தந்த திருமொழிகளைக் கொண்டு அநுபவிக்கவும் அநுபவிப்பிக்கவும் வல்லவர்கள் *விண்ணுளாரிலும் சீரியரே. *

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## ஸ்ரீமதுபயவே. தேசூர். சக்ரவர்த்தி. ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்வாமி திருநாடலங்கரித்தது.

சின்ன காஞ்சீபுரம் தென்னண்டை மாடவீதியில் தேசூர் சக்ரவர்த்தி ஸ்வாமி யென்று ப்ரக்க்யாதராக எழுந்தருளியிருந்தார். அவர் பரமபதித்து முப்பது ஸம்வத்ஸரங்களுக்கு மேலாயிற்று. அவருடைய ஜ்யேஷ்ட திருக்குமாரர் ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமி யென்பவர் செங்கற்பட்டில் வக்கீலாக எழுந்தருளியிருந்தார். அவரை ஸேவித்தால் லௌகிக வ்ருத்தியிலிருப்பவராகவே தோன்றாது. பரமவைதிகர். தேவப்பெருமாள் ஸந்நிதியிலும் ஆழ்வார் மணவாளமாமுனிகள் ஸன்னிதியிலும் விசேஷ கைங்கரியங்கள் செய்தருளியவர். நீடூழி நடைபெறுமாறு சேமவைப்புள்ளது. இந்த ஸ்வாமி நேற்று ஆடி மாதத்தில் திருநாடலங்கரித்து சரம கைங்கரியங்கள் சிறப்பாக நடைபெற்றன. .... .... ....

